### IV.—CALLING ATTENTION TO THE SCARCITY OF DRINKING WATER IN CERTAIN VILLAGES IN UDAYARPALAYAM TALUK.

MR. SPEAKER : The Hon. Member Sri K. R. Viswanathan has given notice of a motion under Rule 40 calling the attention of the Hon. Minister for Revenue to a matter of urgent public importance, namely, the scarcity of drinking water in certain villages in Udayarpalayam taluk in the Tiruchirappalli district. I would request him to remember that we have a three-hour debate on 'Food' to-day, and any time he takes will reduce the time allotted for the discussion of the statement on 'Food'.

* SRI K. R. VISWANATHAN : தலைவர் அவர்களே, உடையார்பாளையம் தாலூக்காவில் பொதுவாகவே குடி தண்ணீர் வசதி இல்லாமையைப் பற்றி நான் அடிக்கடி கூறி வந்திருக்கிறேன். இருந்தாலும், இந்த சமயம் அந்தத் தாலூக்காவில் உள்ள ஆண்டிமடம், செந்தரை பிர்க்காக்களில் சென்ற மூன்று மாத காலமாக பல கிராமங்களில் குடி தண்ணீர் வசதி அறவே இல்லாமல் இருக்கிறது. குடி தண்ணீர் வசதியே இல்லாமல் இருக்கும்பொழுது, மற்றப்படி மக்களுக்கு வாழ்க்கை வசதிகள் என்ன இருக்க முடியும்? அங்குள்ள மக்கள் அநேகமாக மிருகங்கள் போல் தான் வசிக்கிறார்கள். குடி தண்ணீர் இல்லாத நிலையிலே அவர்கள் வயிற்றுப்போக்கு முதலிய வியாதிகளால் கஷ்டப்படுகிறார்கள். நரம்புச்சிலந்தி நோய் அங்கு அதிகமாகத் தாண்டவமாடுகிறது. இத்தகைய நிலைமையானது முக்கியமாக எனது சொந்த ஊரான கொடுக்கூரிலும், அதைச் சுற்றியுள்ள பல கிராமங்களிலும் இருக்கிறது. நிலைமை மிகவும் மோசமாகயிருக்கிறது என்பதைச் சொல்லிக்கொள்ள நான் மிகவும் வெட்கப்படுகிறேன். உரிமை பெற்ற இந்நாட்டில், நாம் பொறுப்பேற்று பத்து ஆண்டுகளுக்கு மேலாகியும் அரசாங்கம் குடி தண்ணீர் வசதி செய்து கொடுக்க முடியாமலிருக்கிறது. அதனால் மக்கள் துன்பப்படுகிறார்கள் என்பதையும் வருத்தத்துடன் சொல்ல வேண்டியிருக்கிறது. குடி தண்ணீர் வசதி செய்து கொடுப்பது அரசாங்கத்தின் கடமை என்பதைச் சுட்டிக்காட்ட ஆசைப்படுகிறேன்.

கலெக்டர் முதலிய அதிகாரிகளிடம் எடுத்துச் சொல்லிய பிறகு அவர்கள் சில வசதிகளைச் செய்து கொடுக்க முன்வந்தார்கள் என்பதை நான் மகிழ்ச்சியுடன் சொல்ல விரும்புகிறேன். சென்ற இரண்டு மாத காலமாக ஜில்லா போர்டு லாரிகள் மூலம் 10 மைலுக்கு அப்பாலுள்ள ஊரிலிருந்து தண்ணீர் கொண்டு வந்து கொடுக்கப்பட்டது.

MR. SPEAKER : I made an appeal to the hon. Member to be brief. He does not seem to have listened to it.

SRI K. R. VISWANATHAN : இப்பொழுது சென்னையிலிருந்து "air compressor" கொண்டு வரப்பட்டு ஆழக்குழாய் கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுக்கப்பட்டு வருகிறது. இன்னும் மழை பெய்து தண்ணீர் வந்தபாடில்லை. தற்காலிகமாக செய்யப்பட்டு வரும் வசதி தொடர்ந்து நீடிக்கப்பட வேண்டுமென்று கேட்டுக்கொகிறேன். இந்த வசதியும் இரண்டு, மூன்று நாட்களுக்கு இல்லாமல் விட்டுவிட்டு கொடுக்கப்பட்டு வருகிறது. ஆகவே தொடர்ந்து இந்த வசதியைச் செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் இந்த வட்டாரத்திற்கு நிரந்தரமாகத் தண்ணீர் வசதி செய்து கொடுக்கவேண்டும். அண்மையிலே கனம் முதலமைச்சர் அவர்கள் எங்கள் வட்டாரத்திற்கு வந்தபொழுது இதைப் பற்றி எடுத்துச் சொன்னேன். அவர்களும் தண்ணீர் வசதி செய்து கொடுப்பது அவசியம் தான் என்பதை ஒப்புக்கொண்டார்கள். சர்க்கார் விதிகள் ஏதேனும் இந்தமாதிரி வசதிகள் செய்து கொடுப்பதற்கு குறுக்கிடலாம். ஆனால் அந்த விதிகளை எல்லாம் தளர்த்தியாவது இந்த பிர்க்காக்களுக்கு கூடிய சீக்கிரம் குடி தண்ணீர் வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் தற்காலிகமாக செய்யப்பட்டு வரும் வசதியையும் தொடர்ந்து நீடிக்கவேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன்.

10th September 1958]

* THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, the provision made for the Comprehensive Rural Water-supply Scheme in the Budget Estimate for 1958–59 is Rs. 30 lakhs. In order to avoid delay in the execution of schemes, the Collectors of districts have been authorised to sanction all schemes costing not more than Rs. 25,000. The Board of Revenue has been empowered to sanction all schemes costing more than Rs. 25,000 without any upper limit. No work taken up under this programme need be referred to the Government for sanction.

As soon as the drinking water scarcity in the villages was brought to the notice of the Collector, he has taken adequate steps in the matter. Two District Board lorries were sent to the area for supply of water to the villages affected.

The long-term measures taken for providing drinking water facilities in the villages are :

(i) *Kodikkadu and Kodukkur* : Two borewells costing Rupees 23,000 each have been put down in the two villages. The work of construction of overhead tanks has been entrusted to the President of the Panchayat.

(ii) *Idayakuruchi* : A borewell has been sunk in the village. Necessary further action will be taken by the Collector after testing the water.

(iii) *Marudur* : There is a tube well put up by the Exploratory Tube Well Organization. The Collector will take further action after analysis of the water from the tubewell.

(iv) *Koovagam* : Two wells have already been executed in the village under the Rural Water Supply comprehensive programme. The Collector has reported that there is no scarcity of drinking water in the village.

(v) *Ponparappi and Sirukalathur* : The Collector has sanctioned the further deepening and cleaning of four borewells in Ponparappi village and two borewells in Sirukalathur village.

(vi) *Thular* : The Collector is taking action to provide a new well in the village.

The Collector has reported that due to recent rains, the water-supply situation has improved.

## V.—THIRD REPORT (SECOND ASSEMBLY) OF THE COMMITTEE ON SUBORDINATE LEGISLATION.

SRI R. SRINIVASA IYER : Mr. Speaker, Sir, I, the Chairman of the Committee on Subordinate Legislation, present this the Third Report [a] (Second Assembly) of the Committee on Subordinate Legislation.

---

a Laid on the table of the House.